11th March 1961]

கிறேம். அதைப்பற்றி பஞ்ச நிவாரண வேலையாக எடுத்துக் கொள்ளுவதாகத் தெரியவில்லை. அதையும் எடுத்துக்கொண்டால் நல்லதாக இருக்கும்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அது தனி முறையிலே 'அக்ரிகல்சரல் டிபார்ட்மெண்டு' மூலமாகச் செய்யவேண்டும். ஆகையினால் கனம் விவசாய அமைச்சர் அவர்களுக்கு இதைத் தெரிவித்தால், அவர் அதைப்பற்றி கவனிப்பார்.

*Venereal diseases*

* 748 Q.—SRI S. RAMALINGA PADAYACHI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மேக வியாதியை தடுப்பதற்கு அரசாங்கம் எடுத்துக்கொண்ட தீவிர நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] is placed on the table of the House.

SRI S. RAMALINGA PADAYACHI : இந்த நோய் குடி தண்ணீர் மூலமாகத்தான் பரவுகிறது. குளங்கள் போன்ற பொது இடங்களில் மற்றவர்களுடன் சேர்ந்து பழகுவதால்தான், இம் மாதிரி இருக்கக்கூடிய நோய் ஏற்படுகிறது. இதைத் தடுப்பதற்கு அரசாங்கத்தினால் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இது ஒரு விதமான நோய். இதற்காக ஸ்பெஷல் 'எக்ஸ்பெர்ட்' படிப்பு படித்தவர்கள் தான் இதைச் செய்யவேண்டும். கனம் அங்கத்தினர் இதை சாதாரண நோய் என்று நினைத்திருக்கிறார் போலும். நாம் மேஜையின் மீது வைத்திருக்கும் அறிக்கையில் சொல்லியிருக்கும் தடுப்பு நடவடிக்கைகளையெல்லாம் எடுத்துக்கொண்டிருக்கிறோம்.

SRI S. RAMALINGA PADAYACHI : க்ஷயரோகத்திற்கு கிராமங்களில் ஊசி போட்டார்கள். அந்த ஊசியினால் மேக நோயும் கட்டுப்படுமா என்று கேட்டதற்கு மேக நோயும் அதனால் எடுபடுமென்று சொன்னார்கள். ஆக, இந்த இரண்டு நோய்களும் அந்த ஊசியினால் அகற்றப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இரண்டு நோய்களுக்கும் ஊசி குத்துவது ஒரு விதத்தில்தான். ஆனால் மருந்து தான் வித்தியாசம்.

*Cold storage*

* 749 Q.—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) the place where the cold storage facilities have been provided for the preservation of fish;

---

[a] Printed as Appendix II on page 216 infra.